உ

திருச்சிற்றம்பலம்

# சைவ சிந்தாந்த உலகிற்கு செங்குந்தர் வழங்கிய கொடை

சந்தான குரவர்களுள் நான்காமவராக விளங்குபவர் உமாபதி சிவாசாரியார். இவர் தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரவருள் ஒருவர். ஒருநாள் வழக்கம்போல நடராசப் பெருமானை வழிபாடு செய்து பகற்பொழுதில் பல்லக்கில் மனைக்குத் திரும்பிக் கொண்டிருந்தார். ஏவலர் சிலர் கைவிளக்கு ஏந்தி முன்பு சென்றனர். இதைக்கண்ட மறைஞானசம்பந்தர் (மூன்றம் சந்தான குரவர்)

**பட்டகட்டையில் ஏறிப் பகற்குருடு போவதைப் பாருங்கள்**

என மொழிந்தார். அம்மொழி உமாபதிசிவனார் செவியில் விழுந்த அளவில் பல்லக்கனின்றும் இறங்கி மறைஞான சம்பந்தர் மலரடிகளில் விழுந்து வணங்கினார்.

பல்லக்கைப் பட்டகட்டை என்றும் பகலில் கைவிளக்கு முதலிய பரிவாரத்தால் விளைந்த ஆடம்பரத்தைப் பகற்குருடு என்றும் வெளிப்படையாகப் பொருள் கொள்ளுமாறு மறைஞான சம்பந்தர் கூறினாரேனும் பசை இல்லாத இவ்வுலகத்தினையே அவர் பட்டகட்டை எனக் குறித்தார் என்பதும், வேதம் ஆகமம் முதலிய கலையறிவுகள் எல்லாம் நிரம்பப் பெற்றும் ஞானம் பெறாதவர் என்பதனையே, பகற்குருடு எனக் குறித்தார் என்பதும் உமாபதியார் கொண்ட ஆழ்பொருள்களாயிருத்தல் வேண்டும். அவருடைய அகவிழிகளைத் திறந்து மெய்ஞ்ஞானம் பெறவேண்டும் என்ற தாகத்தை உண்டாக்கக் குருநாதருடைய இந்த மொழிகள் துணைபுரிந்தன.

தம்முடைய பகட்டான வாழ்வும் பிறவும் அகவாழ்விற்கு அணுவளவும் துணைபுரிய மாட்டா என்பதை உமாபதியார் உணரலானார்.

உமாபதியார்க்கு ஞான உபதேசம் புரிந்த மறைஞான சம்பந்தர், அவருடைய பக்குவ நிலையை அறியவும் உலகிற்கு உணர்த்தவும் திருவுளம் கொண்டார். தில்லையில் ஆடை நெய்யும் செங்குந்தர் வாழும் திருவீதிக்குச் சென்றார். உமாபதியாரும் தன் ஆசிரியர் பின்னேயே அன்புடன் சென்றார். அத்தெருவில் ஆடைநெய்வோர் நூலின்பாவில் கஞ்சியேற்றும் பொழுது வழிந்தொழுகும் கூழை மறைஞானசம்பந்தர் தம் திருக்கரங்களில் ஏற்று உண்டார். அப்போது அவரது திருக்கைகளில் கூழ் ஒழுகிற்று. அக்கூழை ஆசிரியருடைய பரிகலசேடமாக (குருவருள் பிரசாதமாக)க் கருதி உமாபதியார் தம் கையேற்று உண்டார்.

மறைஞானசம்பந்தர் தம் மாணவரின் மனப்பண்பாட்டினை உணர்ந்து மகிழ்ந்தார். தாம் அருணந்தி சிவனாரிடம் பெற்ற உபதேசத்தை உமாபதியார்க்கு உணர்த்தியருளினார். சாத்திர நூல்கள் பலவற்றையும் உணர்த்தியருளினார். உமாபதியார் மெய்ஞ்ஞானியாக விளங்கினார்.

தில்லைவாழ் அந்தணர்களோ, உமாபதியார் அந்தணர்க்குரிய குலஒழுக்கத்தினைத் தவறினார் எனக்கொண்டு அவரைத் தம்மரபினின்றும் விலக்கிவிட்டனர். ஆனந்த மா நடராசரைத் தீண்டி வழிபடும் பேற்றினை அவர் இழந்தார். தில்லைக்கு அருகில் சோழமன்னன் கொடுத்த ஒரு சிற்றூரில் திருமடம் ஒன்றில் தங்கித் தவம் பெருக்கி வரலாயினார். அங்குச் சிவபூசையும் நிட்டையும் புரிந்து பக்குவமுள்ள மாணவர்கட்குச் சிவஞான நூல்களை உபதேசித்து வீற்றிருந்து வரலாயினார். கொற்றவன் (அரசன்) வழங்கிய ஊர் ஆதலின் அப்பகுதி கொற்றவன்குடி என்றும், அங்கு வாழ்ந்து வந்த உமாபதியார் கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியார் என்றும் வழங்கப் பெற்றார்.

மூவாயிரம் அந்தணர்களில் ஒவ்வொருர் ஒவ்வொரு நாளும் நடராசப் பெருமானுக்குப் பூசை செய்தல் மரபு. இதன்படி

உமாபதியார்க்கு உரிய நாள் வந்தது. உமாபதியார் நடராசர் பெருமானைப் பூசைசெய்ய ஆர்வமுடன் சென்ற போது பிற அந்தணர்கள் தடுத்துவிட்டனர். வருத்தத்துடன் திருமடம் வந்த அவர்மனத்தாலேயே அன்றைய வழிபாட்டைச் செய்து முடித்தார்.

வேறு ஓர் அந்தணர் திருக்கோயிலில் பூசை செய்யப் புகுந்த போது, பூசைப் பெட்டகத்துள் பெருமானைக் காணாது திகைத்தார். அந்தணர்கள் செய்தியறிந்தனர். அவர்கள் யாவரும் கேட்ப இறைவன் அருள்வாக்காக, இன்றைய பூசனை முறையுடைய நம் நம் அன்பன் உமாபதியிடம் சென்று, அவனுடைய பூசனையை ஏற்று நிற்கின்றோம் என்று அருளினார். இது உமாபதியார் உண்மை அன்பைப் பிறர் அறிய வாய்ப்பாயிற்று.

தில்லைக்கோயில் மடைப்பள்ளிக்கு விறகு கொண்டு வந்து தரும் பெற்றான் சாம்பானுக்கு இறைவன் கனவில் தோன்றி,

**அடியார்க்கு எளியவன், சிற்றம்பலவன்; கொற்றங்**
**குடியார்க்கு எழுதிய கைச்சீட்டு - படியின்மிசை**
**பெத்தான் சாம்பானுக்குப் பேதமற தீக்கை செய்து**
**முத்தி கொடுக்க முறை.**

எனச் சீட்டுக்கவி தந்து, அதை உமபாதியாரிடம் தந்து முத்தி பெறுமாறு அருள் செய்தார். அவ்வண்ணமே அவ்வன்பர் உமாபதியாரிடம் ஓலையைத் தந்தார். உமாபதியார் நடராசரின் கருணையை நினைந்து மனம் உருகி, சத்தியோ நிர்வாணதீட்சை என்னும் தீட்சை தந்து அவரை முத்தி பெற வைத்தார். அவ்வன்பர் முத்திபெற்றதை நம்பாத உறவினர்கள் நம்புமாறு, அரசன் முன்னிலையில், தாம் செய்யும் சிவபூசை நீரால் நாளும் நனைந்து கோமுகி அருகில் முளைத்திருந்த முள்ளிச்செடிக்கு அத்தீட்சை தந்து ஒளிமயமாக மாறி முத்தி பெறச் செய்தருளினார்.

தில்லைத் திருக்கோயில் பெருவிழாக்காலம் வந்தது. கொடி உயர்த்தி விழாவைத் தொடங்குவது ஆகமவழக்கு.

அந்தணர்கள் கொடியேற்ற முயன்றபோது கொடிமேலே ஏறாது நின்றுவிட்டது. இறைவன் அருள்வாக்கு. உமாபதி வந்தாலே கொடி ஏறும் என ஒலித்தது. அந்தணர்கள் உமாபதியாரை மரியாதையோடு அழைத்து வந்தனர்.

தம்முடைய ஆசானாகிய மறைஞானசம்பந்தருக்கு கஞ்சியளித்த செங்குந்தர்களை அழைத்து வருமாறு உமாபதி சிவாச்சாரியார் கட்டளையிட்டருளினார். செங்குந்த மரபினர் சன்னிதானத்தில் வந்து வணங்கி நிற்க, உமாபதி சிவாச்சாரியார் இடபக்கொடியை அவர்கள் கிரங்களில் கொடுத்து திருவீதி வலம் வரும்படி ஆணையட்டருளினார். திருவீதி வலம் வந்தபின் உமாபதியார் அங்கு வந்து. திருவருளை நினைத்து நான்கு பாடல்களை அருளினார். அவ்வளவில் தானே கொடி ஏறி அருளியது. இப்பாடல்கள் கொடியேற்றுவதற்காக அருளப்பட் கவியாதலின் கொடிக்கவி எனப்பெயர் பெற்றது. அதனைக் கொடிப்பாட்டு என்றும்கூறுவர். இந்நூலில் முதற்பாடல் கட்டளைக் கலித்துறையில் அமைந்தது. ஏனைய 3 பாடல்கள் வெண்பா யாப்பில் அமைந்தவை. மிகச் சுருங்கிய நூலாயினும் உயிர் ஈடேறுவதற்கென ஆசிரியர் தம் கருணையால் அருளப்பெற்றது ஆதலின் இந்நூல் படித்துப் பயன்பெறத் தக்கதாகும். இது 14 சைவ சாத்திர நூல்களுள் ஒன்றாக விளங்குகிறது.

தென்பால் உகந்தாடும் தில்லைச் சிற்றம்பலவன் கோயில் தெற்குத் திருக்கோபுரத்தில், இருபுறமும் பட்டொளி வீசிப் பறக்கிறது தில்லைக் கொடி, செங்காவிநிறத்தில் ஒளிரும் அன்னம்பாலிக்கும் இத்திருக்கொடியையும் செங்குந்த மரபினரே வழங்கி வருகின்றனர். ஆனி, மார்கழி மாதங்களில் மகோற்சவத்தின் தொடக்கமாகிய துவஜாரோகணத் திருநாளில் இந்த மங்கலத் திருக்கொடி கொடியேற்றத்தின் போது கோபுரத்தின் உச்சியில் இருபுறமும் கட்டப்பெறும். இதனை உமாபதி சிவனார் கோபுர வாயிற்கொடி என்று கொடிக்கவியில் சிறப்பிக்கிறார்.

## கொடியேற்றுதல் தத்துவம்

கொடியேற்றுதல் என்பது பற்றித் தத்துவக் கருத்தாக ஒன்று உரைப்பதுண்டு. கொடி மரத்தைச்சிவ வடிவாகவும், கொடிச்சீலையை மறைப்புச் சத்தியாகவும், அதில் வரையப்பட்டுள்ள இடபத்தை உயிராகவும், அக்கொடிக் கயிற்றை அருளாகவும், அதனொடு இணைந்துள்ள தருப்பைக் கயிற்றை பாசமாகவும் கூறுவர். எனவே தருப்பைக் கயிறாம் பாசத்தோடு இணைந்துள்ள கொடிச்சீலையில் இணைப்புண்டு கிடக்கும் உயிர் கொடிக்கயிறாகிய அருளின் துணை கொண்டு, கொடி மரமாகிய சிவத்தைச்சேர வேணடும்என்பது இதன் உட்கருத்தாகும்.

தில்லைவாழ் அந்தணர்கள், உமாபதி சிவத்தைச் சாதி விலக்கு செய்து வைத்த நிலையில் செங்குந்தர்கள் தாம் வார்த்த கூழை உண்ட மறைஞானசம்பந்தரின் எச்சில் பிரசாதத்தை உண்டதனால் தம் சாதியில் ஒருவராக மதித்தனர். எனவே கொற்றவன்குடி முதலியார் எனப் போற்றினர். மேலும் உமாபதியார் கொடிக்கவி அருளியபோது செங்குந்தர்கள் உடனிருந்துள்ளனர். அது தொடங்கி ஆண்டுதோறும் ஆனி, மார்கழி பெருவிழாக்களில் கொடியேற்றும் உரிமையைச் செங்குந்தர்கள் பெற்றுத் தொடர்ந்து செய்து வருகின்றனர்.

### கொடிக்கவி

**ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம்; ஒன்று மேலிடில், ஒன்று**
**ஒளிக்கும் எனினும் இருள் அட ராது; உள் ளுயிர்க்குஉயிராய்த்**
**தெளிக்கும் அறிவு திகழ்ந்துஉள தேனும் திரிமலத்தே**
**குளிக்கும் உயிர், அருள் கூடும் படிகொடி கட்டினனே.** 1

தெளிவுரை : சிவஞானத்திற்கும் ஆணவமலத்திற்கும் உயிராகிய இடம் ஒன்றேயாகும். இவற்றுள் ஒன்று மேம்படுங்கால் பிறிதென்று மறையும். எனினும், ஆணவமலம் சிவஞானத்தைக் கட்டுப்படுத்துவதில்லை. அனைத்துயிர்க்கும் உயிராய் அவற்றின் அறிவை விளக்குகின்ற சிவஞானம் முற்செய் தவத்தால் உயிரின்மாட்டுச் சிறிது விளங்கியிருப்பினும் அவ்வுயிர் ஆணவம்

கன்மம் மாயை என்னும் மும்மலங்களிலும் கட்டுண்டேநிற்கும். அவ்வாறு கட்டுண்டு நிற்கும் உயிர்களுக்குத் திருவருள் பொருந்துமாறு நான் இக்கொடியைக் கட்டுவன் என்பதாம்.

இப்பாடல் உயிரின் குறிக்கோளை இயம்பியது.

**பொருளாம் பொருள்ஏது? போதுஏது? கண்ஏது?**
**இருளாம் வெளிஏது? இரவுஏது? – அருளாளா**
**நீபுரவா வையமெலாம் நீ அறியக் கட்டினேன்**
**கோபுர வாசற் கொளடி.** 2

தெளிவுரை : அருள் நிறைந்த பெருமானே! பொருள்களில் என்றும் நிலைத்திருப்பதும் பிறவற்றை இயக்குவிப்பதும் ஆய பொருள் எது? அப்பொருளினின்றும் விளங்கும் ஒளி எது? அதன் துணையால் கண்டு மகிழும் கண் எது? அக்கண்ணிற்கு மறைப்பாகும் இருளாகின்ற வெளி எது? இரவு எது? நீ காக்கும் இவ்வுலகம் முழுவதும் நீயே சான்றாக இவற்றையெல்லாம் அறியுமாறு திருக்கோபுரவாயிலில் இக்கொடியைக் கட்டுவன் என்பதாம்.

இப்பாடல் இறைவன் உயிர்க்கு அருளும் முறைமையைக் கூறியது.

**வாக்காலும் மிக்க மனத்தாலும் எக்காலும்**
**தாக்கால் உணர்வலிய தன்மையனை – நோக்கிப்**
**பிறித்தறிவு தம்மில் பிறியாமை தானே**
**குறிக்கும்அருள் நல்கக் கொடி.** 3

தெளிவுரை : எக்காலத்திலும் மிகுதியான சொற்களாலும், மனத்தாலும் எய்துதற்கரியனாயும், உயிர் தன் அறிவால் அடைதற்கரியனாயும் விளங்கும் தன்மையனாய இறைவனை வேறாக ஆராய்ந்து பார்த்து அறிவிற்கறிவாய் அதனின்றும் பிரியாது விளங்கும் தகைமையை உலகத்தார் அறிந்து கொள்ளுமாறு இறைவன் திருவருள் சுரக்க இக்கொடியைக் கட்டுவன் என்பதாம்.

இப்பாடல் திருவருளை வேண்டுதலாம்.

**அஞ்செழுத்தும் எட்டெழுத்தும்,ஆறெழுத்தும், நாலெழுத்தும்**
**பிஞ்செழுத்தும் மேலைப் பெருவெழுத்தும் - நெஞ்சழுத்திப்**
**பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்**
**கூசாமற் காட்டக் கொடி. 4**

தெளிவுரை : சிவாயநம எனும் திருவைந்தெழுத்துக் களையும், ஓம் ஆம் ஔம் சிவாயநம எனும் எட்டெழுத்துக்களையும், ஓம் நம சிவாய எனும் ஆறெழுத்துக்களையும், ஓம் சிவாய என்னும் நால் எழுத்துக்களையும், முறையாக எண்ணி அதன் பயனாகப் பிஞ்செழுத்தாம் வகரமாகிய திருவருட்சத்தியையும், மேலான பெருவெழுத்தாம் சிகரமாகிய சிவத்தையும் தன்னுடைய மனத்தகத்து வைப்பின், அதன் விளைவால் பேசும் எழுத்தாகிய வகரமாம் வகரமாம் அருட்சக்தி தன்னுடன் பேசா எழுத்தாகிய சிகரமாம் சிவத்தையும் மிகவும் எளிதாக உயிரின்கண் பதிவிக்கும். அவ்வாறு பதிவிப்பதற்காக இக்கொடியைக் கட்டுவன் என்பதாம்.

இப்பாடல் திருவைந்தெழுத்து விளக்கமாம்.

## சிதம்பர இரகசியத்திரை

சிதம்பரம் கோயிலில் இரகசியத்தானத்தை மூடிநிற்கும் திரையின் வெளிப்புறம் கருநீல வண்ணம் உடையது. உட்புறம் சிவப்பு நிறம் உடையது. இத்திரை ஆண்டுதோறும் ஆனி உத்திர தரிசனத்தன்றும் மார்கழித் திருவாதிரை தரிசனத்தன்றும் மாற்றப்படும். இதற்கென புதிய புதிய இரகசியத்திரைச் சீலைகளை ஒவ்வொரு தரிசனத்தன்றும் உபயமாக அளிக்கும் உரிமையும் செங்குந்த மரபினருக்கே உரியது. தரிசனத்தன்று சிதம்பரம் வெல்லப் பிறந்தான் முதலியார் இல்லத்திலிருந்து சோடச உபசாரங்களுடன் இத்திரைச்சீலை கோயிலுக்கு எடுத்து வரப்பெறும் செவலை திரு. இராஜா சர். இராமசாமி முதலியார் (செங்குந்தர்) வகையறா மரபினர் தொன்று தொட்டு இந்நாள் வரையில் இத்திருத்தொண்டினைச் சிறப்பாகச் செய்து

வருகின்றனர். கனகசபையில் விளங்கும் இரகசியத் திரைச்சீலை செங்குந்த மரபினர் வழங்குவது என்பது செங்குந்த மரபினர்க்குச் சிறப்பளிக்கும் நல்ல செய்தியாகும்.

கொடியேற்றும் விழாவை நடத்தி வைக்கும் செங்குந்தர்கள் ஸ்ரீ நடராஜராஜர் ஆலயத்துக்குள் சூரமச்ஹாரத் தன்று நவவீரர்களாகக் காப்பணிந்து பகல் தீவர்த்தி முதலிய சகல விருதுகளுடன் தம் இனத்தார் புடை சூழ மேளவாத்யம் முழங்க, கிழக்கு சன்னதி வழியாகப் பிரவேசிக்கலாம். இந்த உரிமை சிதம்பரம் கோயிலைப் பொறுத்தவரையில் செங்குந்தர்களுக்கு மட்டுமே அளிக்கப்பெற்றிருக்கிறது.

மேலுலம் சிதம்பரத்தில் பஞ்ச சபைகளுள் ஒன்றாகிய பேரம்பலத்தில் கந்தசஷ்டித்திருநாளில் தில்லைவாழ் அந்தணர்கள், செங்குந்த மரபினரோடு ஒருசேர அமர்ந்து விழாத் தொடக்கம் நிகழ்த்தி வருகின்றனர். பேரம்பலத்தில் அமரும் சிறப்புரிமையும் செங்குந்த மரபினர்க்கே உள்ளது என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

---

## அறம் அழிவில்லாதது

### திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்

அறம் ஒன்றுதான் அழிவில்லாதது. மண், விண், கடல், கதிர், மதி, முதலிய அனைத்தும் அழிந்து போகும். அறம் என்றும் அழிவற்றது. தேன் தான் கெடாது, தன்னில் விழுந்த பொருள்களையும் கெடாமல் காப்பதுபோல், அறம் என்ற ஒன்று தான் எப்போதும் அழிவற்றதாகி நின்று, அறம் புரிவோரையும் அழிவின்றிக் காத்தருளுகின்றது.

பலர் அறிய வேண்டும் என்றோ, புகழுக்காகவோ, பயன் கருதியோ செய்வது அறம் ஆகாது. இரகசியமாகப் பயன் கருதாமல் கடமையுணர்ச்சியுடன் செய்வதே சிறந்த அறமாகும்.

## பழநிவேல் அல்லது தொண்டுள்ளம்

(தி. பொன்னம்பலம் M.A., M.H.E.D)

செல்வ நெடுமாடம் சென்று சேண் ஓங்கி செல்வமதிதோய செல்வம் உயர்கின்ற செல்வர் வாழ்தில்லைச் சிற்றம்பலம் என்னும் சிதம்பரம் நகரம் தென்னாற்காட்டிற்குப் பெருமை சேர்க்கும் திருத்தலமாக விளங்குகின்றது. இந்நகரில் செங்குந்தர் குலம் தோன்று தொட்டு வாழ்ந்துவரும் தொல்குடியாகி இலங்குகின்றது. செங்குந்தர் குலம் செய்த நற்றவப் பயனாய் 1993 ஆம் ஆண்டில் திருமிகு. கு. பழநிவேல் முதலியார் அவர்கள் தோன்றினார்கள். திருமிகு. குமாரசாமி முதலியார் அவர்களும் திருமதி மீனாட்சி அம்மையாரும் இவரைப்பெற்று வளர்த்து உலகிற்கு உதவியவர் களாவர்.

எளிய நெசவாளர் குடும்பத்தில் பிறந்து தம்முடைய உழைப்பாலும் நுண்மாண் நுழை புலத்தாலும் சமுதாயத்தின்உயர் நிலையை எய்திய இவர்தம் வாழ்வு மெச்சத் தகுந்ததாகும். சிதம்பரம் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியில் இவர் கல்வி பயின்றார். 1959 ஆம் ஆண்டு தில்லை நகரில் "வாணி பார்மஸி" என்னும் நிறுவனத்தைத் துவங்கி அயரா முயற்சியால் உயர் நிலக்குக் கொண்டு வந்தார்கள். செங்குந்த குலத்தில் முன்னேற்றத்திலும் உயர்விலும் வேணவா கொண்டிருக்கும் இவர்கள் தென்னத்திய செங்குந்த மகாசன சங்கத்தின் தென்னாற்காடு மாவட்ட செயற்குழு உறுப்பினராகவும் விளங்கி வருகின்றார்கள்.

வில்லாளரை எண்ணின் விரற்குமுன் நிற்கும் வீரன் என்று கம்பன் இந்திரசித்தைப் போற்றுவான். அஃதேபோல் கொடை யாளரை எண்ணில் விரற்கு முன் நிற்போரில் முதல் வரிசையில் இருப்பவர் திருமிகு. கு. பழநிவேல் முதலியார் அவர்கள். நகரத்தின் பல்வேறு அறக்கொடை கட்கும் வாரி வழங்கிய இவர்கட்கு விளம்பரம் என்பது வேப்பங்காய்.

தென்னாற்காடு மாவட்ட கெமிஸ்ட் & டிரகிஸ்ட் அசோசி யேஷன் (South Arcot Chemist & Druggist Association) தலைமைப் பொறுப்பினை ஏற்றுச் செவ்வனம் நிர்வகித்து வருகின்றார்கள். சிதம்பரம் நகரில் சுழற்கழகத்தின் உறுப்பினராகவும் விளங்கி வருகின்றார்.

திருக்கோயில்கள் பலவற்றில் சீரமைப்புக்கும் குடமுழுக்கு விழாவிற்கும், சமயச் சொற்பொழிவுகட்கும் குந்தர் குல மேன்மைக்கும் வாரி வழங்கிய இவர் தம் வள்ளள்மைக்கு ஓர் அளவில்லை எனலாம்.

தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கத்தின் செயல்குழு 30.4.1978 அன்று சிதம்பரத்தில் திருமிகு. கு. பழநிவேல் முதலியார் அவர்களின் இல்லத்தில் கூடியது. செயற் குழுவினர்க்கும் உறுப்பினர்கட்கும் செங்குந்தர் இளைஞர் சங்கத்தார்க்கும் செவியுணவும், வாயுணவும் வழங்கிச் சிறப்பித்தார்கள். செயற்குழுவை ஒரு சிறப்புக் கூட்டம்போல் நடத்திப் பெருமை சேர்க்கத் துணை புரிந்தார்கள். செயற்குழுவிற்குத் தலைமையேற்ற கைத்தறி காவலர் திருமிகு. M.P. நாச்சிமுத்து முதலியார் B.A.B.L., அவர்கள் இதுபோல் இவ்வளவு சீரும் சிறப்புமாகத் தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கத்தின் செயற்குழு இதுகாறும் நடந்ததில்லை என்று கூறிப் புகழ் மாலை சூட்டினர் எனில் அன்னார் நடத்திய விழாவின் மாட்சியை என்னென்று புகழ்வது?

செங்குந்த குலத்து மாணவர்கட்கு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து பயின்றிட வாய்ப்பளிக்கும் வகையில் தக்கோரை அணுகிப் பரிந்துரை செய்து இடம் பெற்றுத் தருதல் இவர் புரியும் பொதுப் பணிகளுள் தலைமை மிக்கதாம். படித்தவர் கட்கும் தக்கோரை அணுகிப் பரிந்துரை செய்து வேலைவாய்ப்பிற்கு வகை செய்வதில் மகிழும் தாயுள்ளம் இவருக்கு உண்டு. சிதம்பரம் நகரில் செயல் திறத்தோடு இயங்கி வரும் செங்குந்தர் இளைஞர் சங்கத்தின் ஆக்கப் பணிகட்கு உற்றதுணையாய் இருப்பதுடன் ஆக்கமும் ஊக்கமும் வழங்கிவரும் இவர்தம் தொண்டுள்ளம் வியக்கவும் நயக்கவும் தக்கதாகும்.

இத்தகைய சான்றோர் அலைவாய்ச் செந்தில் கடற்கரை மணலினும் நிலையாய் ஆண்டு பல்லாண்டுகள் புகழுடன் வாழந்துயர்ந்திட திருச்சிற்றம்பலவன் இணையார் திருவடிகளை இறைஞ்சிகின்றனம்.